தொருந்தளவாய்மகிழ்செய்விகத்தேனைத்துறைக்கரசைச்
சருந்தவிலோசனந்தான்ரகுநாதன்சயிலமின்னே
புருந்திறையைவர்தெரியாமன்மச்சபுரத்திருக்க
மிருந்துரியோதனபாரவணிகள்வெளிப்பட்டவே. (கசங)

அங்ககலிங்கமலையாளமீழமனைத்தும்வென்ற
சிங்கவிசயசயரகுநாதன்சிலம்பிற்பொன்னே
சங்கிலியாரையுங்கண்டேன்பரவைதனையுங்கண்டான்
மங்களசுந்தரனென்றனையேதொழுமண்டலமே. (கசச)

ஆலங்கையாதவமுதின்முன்னுண்டலகையைக்கொ
லேலங்கையாதருண்மால்ரகுநாதன்வெற்பேந்திழையீர்
சேலங்கைக்கொண்டபின்னேமலையாளமுந்திண்டுக்கல்லைப்
போலங்கையாமஃதில்லாதபோதுபுலப்படுமே. (கசரு)

பாவூர்சங்கிராமவிசைசூதர்பாடப்பவனிவரு
மாவூர்நகுலனெனும்ரகுநாதன்வரையனையீர்
கோவூர்முன்காட்டியபின்குன்றத்தூர்வழிகூட்டியப்பா
லூர்நுங்காஞ்சிபுரங்காட்டுதெருண்டைநாட்டியல்பே. ()

எண்கட்டுமானபுற்றேன்றுடலர்படையேங்கவடுந்
திண்கட்டுவாங்கத்துரைரகுநாதவசீரன்வரைப்
பண்கட்டுமென்மொழியீர்நீர்மிகவும்பலரறியக்
கண்கட்டுவித்தையுஞ்செப்பிடுவித்தையுங்கற்றவரே. (கசஎ)

தாவியங்கற்றமிலாமற்பொருதச்சமரிலறை
கூவியங்கத்திகல்வெல்ரகுநாதகுமுணன்வெற்பி
லோவியங்கற்பகவல்லியன்னீரிவ்வுலகியற்கை
காவியங்கற்றவர்க்கேயத்தமாகுங்கடபடமே. (கசஅ)

கண்டாரிதன்னைக்கயாத்தையுமாக்கையுங்காதையும்வாள்
கொண்டாரிகொண்டல்ரகுநாதன்றேவைக்குலவரைப்பூ
வண்டாரிகங்குற்குழலீர்நாமுந்திமடியலையாற்
புண்டரிகங்கண்முழுகத்தெரியும்புரிவனங்களே. (கசகூ)

நாளத்தையம்புயவன்னைப்பணைச்செம்பிநாடன்சக்கிர
வாளத்தைவென்றபுயரகுநாதன்மணிவரைமேல்
காளத்தைவெல்லுமைநாடகம்பாவையைக்காட்டுஞ்சம்மா
தாளத்தைமேயந்தியின்றீர்மத்தளமுந்தருகுவனே. (கருo)

இடனாகமற்றையனாகச்சாரியியற்றிவெட்
டிடனாகவெச்சியல்ரகுநாதன்சிலம்பிற்பெண்ணே
கடனாகத்தங்கவரையெதிரேவரக்கண்டுமறி
யுடனேகொடுக்கவுடையார்பிணையையொளிப்பதென்னே. ()

படியுமமரருலகுமமைசயும்பாதலமுங்
கெடிகொளிசைரகுநாதன்வசிரங்கிரியணங்கே
கொடியுமுரசுங்கவிகையுஞ்சிலையுங்கொடாமலணி
முடிமாத்திரமதமேனுக்களித்தன்முறையல்லவே. (கருஉ)

கேட்டத்தருவருமூட்டுமதனைக்கிளர்புலவர்
பாட்டத்தருகிரகுநாதசேதுபதிவரைவாய்
நாட்டத்தகுவளேவேழங்குவலைநளினமல்லி
காட்டத்தருமிளநீரொன்றுகாட்டல்கணக்கல்லவே. (கருங)

ஆரங்கராசலமாநிதிவீரர்க்களித்திகன்மேற்
போரங்கமாகவருரகுநாதன்பொருப்பணையீர்
போரங்கமாகும்பகோணத்திற்பாதியைப்பின்மறைத்தீர்
சாரங்கபாணியெனும்பேரெவ்வாறுதகுமுமக்கே. (கருச)

சேண்டவர்வாழ்திருந்தேதலைவயையாளுந்திருமணிமார்
பாண்டவர்தூதன்ரகுநாதசேதுபதிவரைவாய்
நாண்டவர்முன்னிட்டதிலையொளித்துத்தன்னற்பெயரைப்
பூண்டவர்தானத்தைத்தான்வாங்கிக்கொள்ளப்புறப்பட்டதே

விலையைமறைக்குங்கனகிரீடிவிலைகைக்கொண்டெண்ணெண்
கலையைமறைக்குமனுரகுநாதன்கவின்வரைவாய்ச்
சிலையைமறைக்குநுதலீர்முன்னுகத்தெரிதலின்றி
வலையைமறைத்துவைத்திர்பாற்றலைவாசங்கிரவாகத்தையே. ()

படமினியார்வரைந்தெண்டிக்குங்காட்டெழிற்பார்த்திபன்
திடமினினீண்மந்திரவான்ரகுநாதனற்றேரவைவெற்பிற் [கைத்
தொடமினியோங்குமணியீர்மையொரியைத்தூர்த்தபின்பு
குடமினியேதுக்குமீரவலியக்கொடுக்கிறுமே. (கஎ)

வெம்பிற்சுரளமெனக்காய்ந்திகலைவிடுத்துத்தன்னை
நம்பிற்கருணைபுரிரகுநாதசுகமேந்திரன்வெற்பிற்
செம்பிற்கனகமணியணியீர்முனங்கேசவன்கை
யம்பிற்கரன்படவெற்பரனைங்களசுப்பட்டவே. (கஅ)

வல்லாரங்காட்டியபம்பரத்திற்குபூல்வாய்பரிமேற்
செல்லாரங்காட்டுமுராரகுநாதன்றன்றேரவைவெற்பில்
வில்லாரங்காட்டுமணியீர்மதிப்புமிகுந்தனக்
கல்லாரங்காட்டியதேரேகல்லாரமுங்காட்டினன்றே. (ககூ)

அலசத்தைவாரியெனநேர்நகையையகற்றியபூ
நலசத்தையேகொண்மதியூகியாம்ரகுநாதன்வெற்பிற்
பலசத்தைநீடுமுவரிமதித்தும்பருக்குவைத்த
கலசத்தைக்காட்டியமுகத்தையேதுகரந்ததுவே. (கஉ0

தலையிற்செல்வளர்காவினிற்றுவத்தராளமுதிக்
கலையிற்செல்செம்பியாள்ரகுநாதன்கனகவரைத்
துலையிற்செல்பவராமரையிர்மலர்தோறுந்திரி
குவளையிற்செல்வண்டுகோங்கிற்செல்லாதென்கூறுகவே. ()

வண்டிறகாலலர்முல்லையான்கவிவாணர்செய்யுள்
கொண்டிறவீகைதருரகுநாதகுபேரன்வெற்பிற்
பண்டிறவாமருந்தன்னீர்வெந்நாகப்பசிதணிக்கக்
கண்டிறவாமலிளநீர்கொடுத்தென்கவையில்லையே. (௧௧௨)

மித்திரமன்னர்மகிழப்பகைஞர்முன்வீழ்ந்துதொழச்
சத்திரமன்னவருரகுநாதன்சயிலவெற்பிற்
சித்திரமன்னகுயிலேதனத்தைத்தெரியவைத்துப்
பத்திரமன்னவறிவுறிற்சேதப்படைத்தவர்க்கே. (௧௧௩)

தளையாடுகாலொடொன்னார்திறைகட்டுஞ்சமுகத்திற்பொற்
கிளையாடுதேவைத்துரைரகுநாதகிரீடிவெற்பில்
வளையாடுகைத்தலத்தீர்பாச்சிகைக்குண்மறைத்துமனம்
விளையாடச்சூதின்கவடங்கள்வெளிப்பட்டவே. (௧௧௪)

அனமிகத்தோன்றுவயற்செம்பிநாடனயன்றந்தைவா
கனமிகத்தோன்றுதாசரகுநாதன்கனகவெற்பின்
மனமிகத்தோன்றுமொருமாமலருண்மறைந்திடவி
தனமிகத்தோன்றுமபிமானமுள்ளவர்தங்களுக்கே. (௧௧௫)

தேவுளிருக்கும்வளர்செம்பிநாடனற்றேறவையையாள்
பூவுளிருக்கும்வளரகுநாதன்பொருப்பனமே
மாவுளிறைவர்க்கெதிர்வைத்துக்காணல்வழக்கிதன்றிக்
கோவுளிருக்கவிங்கேதுக்குமாலிகுசக்கனியே. (௧௧௬)

சிற்றாலவட்டங்குடைகொடிசாமரைசேரப்புடை
நற்றாலமென்னவருரகுநாதன்மைந்நாகமின்னே
கற்றார்பணிநற்றிரிகூடவெற்பெதிர்காட்டித்திருக்
குற்றாலமாந்தலமுங்காட்டினானிட்டைகூடவனே. (கசஎ)

வில்வழக்கத்திற்றனஞ்சயன்கன்னன்விதுரனெனச்
சொல்வழக்கத்துரையாள்ரகுநாதகருணன்வெற்பிற்
செல்வழக்கக்குழலீர்சாட்சிகைப்பத்திரமிவையில்
வல்வழக்கிட்டுவெளிப்படுவார்முழுவஞ்சர்களே. (கசஅ)

நிக்கிரகமேயனுக்கிரகமாமநுநீதிபுரி
யுக்கிரமகாதளவாய்ரகுநாதன்வெற்போதிமமே
சக்கிலியாயினர்பார்ப்பாருங்கைக்கொள்ளச்சம்பந்தத்தா
லக்கிரமமென்றுகுயவரிதைவெளியாக்கினரே. (கசகூ)

சொற்பதக்கற்பனையோரெழுத்திற்சத்தஞ்சேர்வதிலா
மற்பதக்கத்தந்தருரகுநாதமகிபன்வெற்பி
னிற்பதக்கற்பகவல்லியன்னீர்வெகுநேர்த்திநங்கைப்
பொற்பதக்கங்கொளமார்பிற்கடகம்புறப்பட்டதே. (கஎ0)

பூமான்பெருஞ்செல்வம்பாமான்கலைகள்பொருட்கொடைக்
காமான்கரதலமால்ரகுநாதன்கவின்வரைவாய் [குக்
மாமான்மடமயிலேயெதிர்கொள்பவர்வைத்தனரோ
கோமான்வெளிப்படுமுன்னெதிர்பூரணகும்பங்களே. (கஎக)

விட்டங்கொடுக்குமுனிவைமுன்னம்பியவீடணற்குப்
பட்டங்கொடுக்கும்ரகுநாதசேதுபதிவரைவாய்
வட்டங்கொடுக்கும்பணத்துக்குமேற்றனம்வண்டர்கட்பா
விட்டங்கொடுக்குமைமேனாட்டவர்க்கும்வந்தெய்தியதே ()

நூலாயிருக்குநர்க்கத்திகருஞ்சநரூறளிக்கு
மாலாயிருக்கும்ரகுநாதன்றெய்வவரைமயிலே
மேலாயிருக்கினும்பார்ப்பாரிரவலர்மேலன்றிக்கீழ்
போலாயிருக்கினும்பணைத்தனத்தர்புரவலரே. (௧௭௩)

போரூடுசென்றுவலவனைப்போலத்தைநபுத்திரற்குத்
தேரூர்சல்தரமாஸ்ரகுநாதனற்றெய்வயன்னீர்
நீரூர்மைநோக்கரும்வெட்கியொளிக்கநிதானத்திலே
போரூசிமேலிருப்பமாட்டுமுபாயநன்றே. (௧௭௪)

திசைபுகழ்க்கன்னன்குபோரன்விசயன்சிபியெனச்சொல்
லிசைரகுநாதன்மணிவரையானனையீருமது
வசைநீர்கசகர்னவித்தையைப்பார்த்துமகிழ்ந்தனையேற்
பசையுறுகோகர்னவித்தையெப்போதினிப்பார்ப்பதுவே. ()

மூடுக்கவருதிரண்மல்லினராவிமுடியவதை
கொடுக்குமாரகுநாதன்வரைமலர்க்கொம்பனையீர்
அடுக்குங்கொளீர்க்கணையாழிமுகத்திட்டடக்கியபி
னிடிப்பினிற்குண்டலமார்பிற்சிலம்புவந்தேறியதே. (௧௭௬)

திடமுமுரமுமிசையுங்கொண்டச்சமுந்தீமையுங்க
படமுமொழித்தரகுநாதசேதுபதிவரைவாய்க்
கெடவாத்தியமழிவிந்திரிணியுங்கள்கீதத்தையு
மடவீரறிவிக்கினுன்கொட்டிக்காட்டுவன்மத்தளமே. (௧௭௭)

சங்கையிலாமவிரப்போர்க்குதவவுதாரநிதிப்
பங்கயமன்னரகுநாதசேதுபதிவரைவாய்
மங்கைநல்லீரிதுநல்லாச்சரியமுண்மையுங்கேளுக்
கங்கைகடக்குமுன்னேசித்திரகூடமென்கண்ணுற்றதே. ()

வைம்மையுடையகைவேலா லொன்னார்பொன்மணிமுடிக்
பைம்மையறுத்தரகுநாதசேதுபதிவரை வாய் [குப்
கைம்மையுடையருசுப்பீர்வரச்சங்கநாடுவெதிற்
கைம்மையுடையவர்க்கேனணிமைபெய்துங்கச்சிமிழே. ( )

இங்கிதரத்தினப்பகுதிகொணர்ந்துமுனெண்ணியன்னா
பங்கிடுமுற்றரகுநாதசேதுபதிவரைவா
யங்கிதமாகத்தருசடகோபங்கண்டார்க்குமுன்
சங்கிடுகோளிட்டசக்கரங்காட்டத்தகுமினியே. (கஅ0)

அளையுண்டிடநவநீதந்திருடிமுன்னுய்ச்சியர்கைத்
தளையுண்டமெய்ரகுநாதன்சிலோச்சயத்தைநயனல்லீர்
வளைசெண்டுமீன்சொன்மதுரையடைத்தவரிமுன்வென்றீர்
திளையுண்டமேருவும்வென்றிடனீரந்தத்தென்னவரே. ( )

குமையவரைப்பிடத்திலொன்னார்பெய்குவியக்கைம்மேற்
சமையவரைமிருபன்ரகுநாதன்றடவரைவா
யமையவரையுயர்சொர்க்கமுன்காட்டியருளியநீ
யிமையவரையொளிக்கத்தகுமோசொலிமேரந்திறையே. ( )

விளைவாய்வருமிகல்கன்றுலெறிந்துமுன்வென்றுவந்த
தளவாயரசர்பிரான்ரகுநாதன்றடவரைவாய்க்
குளவாய்தனினுங்கள்விற்குளச்சேல்கள்குதிக்குமென்றே
களவாய்மறைத்துவைத்தீர்மடவீரிருகைப்பிடித்தே. (கஅங)

கோவைத்துறைக்குப்பதினாயிரம்பொன்கொடுத்திசைகொ
டேவைத்துறைக்குத்துரைரகுநாதன்றகிரிபின்னே
யேவைத்துறைக்குள்வெறிகொண்டெசங்கிலியேந்துமத
மாவைத்துறைக்குவெளியேவிடிற்பழிவந்திடுமே. (கஅச)

கடைமுன்னர்நின்றுமுடிமேற்றமதிருகைகுவித்துப்
படைமன்னர்போற்றும்ரகுநாதன்சேதுபதிவரைவா
யிடைதான்குறைந்ததுமச்சமுங்காட்டுவதில்லையென்றூன்
யடவிருமருதனத்தையெவ்வாறுமதிப்பதுவே. (கஅரு)

அமரர்மனிதர்நரரமுதராசநராகவுக்கிர
சமர்செய்செயரகுநாதன்சிலோச்சயத்தையனல்லிர்
நமனையடக்கிக்கடலூருங்காட்டியஞாயத்தின
னுமையிவ்வுலகிலமுதகடேசரென்றோதுவரே. (கஅசு)

ஈரஞ்சுகண்டனிறக்கவின்னோர்குடியேறமகி
பாரஞ்சுமக்கும்ரகுநாதசேதுபதிவரைவாய்
வீரஞ்சுதாரிப்பதின்றிமுன்கேடகம்விட்டெழிந்து
போரஞ்சுவாரிற்கைவாளையொளிப்பதென்பூங்கொடியே. ()

சென்றத்தைக்கண்டகப்போரிற்றினைத்தள்ளிச்செய்யமர்நா
ணின்றத்தைக்கண்டரகுநாதன்மால்வரைநேரிழையீ
ரொன்றத்தைக்கண்டிருக்கச்சூர்செங்கற்பட்டுயர்ந்தகழுக்
குன்றத்தைக்கண்டனன்காண்பதெப்போதினிக்கோவளமே.

செல்லூரப்பார்த்திபராகுமொன்றுருயிர்தின்னநமன்
பல்லூரப்பார்க்கொல்ரகுநாதசேதுபதிவரையீ
ரல்லூரைப்பாற்பொன்னனையீரிப்போதுங்களத்திப்பட்டு
வல்லூரைப்பார்த்தனன்பார்ப்பேனினிநெய்தல்வாயலையே. ()

செல்லக்கைம்மாறுபடையார்க்குதவுமைசேரலரை
வெல்லக்கைபோயவைவேல்ரகுநாதன்விலங்கற்பொன்னே
நல்லக்கைவைத்தப்படியெய்துமீளுவனுனுமது
பல்லக்கைக்காட்டியனுப்புமெனைவெளிப்பாசறைக்கே. ()

கோசிகமத்தமணிசூறையிட்டெதிர்கூடலர்தம்
பாசறையிட்டரகுநாதசேதுபதிவரைவா
யாசிரியத்தின்முன்கூவிளங்காட்டியருளியசீர்
மாசில்கருவிளமுங்காட்டிற்காரிகைவாசிப்பனே. (ககூக)

கார்நிரையத்தைத்துரத்தியெடுத்ததன்கைவரையாற்
பார்நிரைகாத்தரகுநாதசேதுபதிவரைவாய்
நேர்நேர்நிரைநேர்நிரைநிரைமூன்றையுநீக்கிப்பின்று
நேர்நிரையொன்றையுங்காட்டியவாறென்னநேரிழையே. ()

வல்லியத்தானையிலொன்னலர்கெட்டுப்பின்வாங்கவடு
பல்லியத்தானரகுநாதசேதுபதிவரைவாய்ச்
சொல்லியத்தானையழைக்குமுன்மாமிதொடருதல்போ
லெல்லியத்தானையசையாமலேதுக்கெழுகயிறே. (ககூங)

சித்திரைக்கண்டமொன்பாணிற்செய்வோருசுற்சேதுவிற்செ
பத்திரைக்கண்டரகுநாதசேதுபதிவரைவாய் [ய்
நத்திரைக்கண்டமணிகோகனகம்பொன்றுமணி
யத்திரைக்கண்டனமாவுங்கண்டாலரியாகுவமே. (ககூச)

மூந்தமாரகதமாணிக்கஞ்சொன்னமுடிநிருபர்
சித்தமெதிர்பெய்ரகுநாதன்மால்வரைநேரிழையீ
ருத்தமராயினர்சாணர்சண்டாளருயர்மகுட
வத்தனர்தாழ்ந்தனர்பாருங்கலியுகவஞ்சனையே. (ககூரு)

காலாவுலகையளவிட்டமாலெனக்கைவளர்செங்
கோலாலளவிட்டமால்ரகுநாதன்குவட்டணமே
மேலாம்வருணத்தர்மாலைமுன்காட்டிவிதிப்படிப்பின்
றுலாம்வருணத்தர்மாலையுங்காட்டுதனல்வழக்கே. (ககூசா)

திக்கசமாமைமகமேபெரனந்திரிசேடன்மகிழ்
மிக்கவளர்புகழ்சேன்ரகுநாதன்மைவெற்பணங்கே
கைக்களச்சாதிரன்னைப்தலைக்கொண்டதுகண்டிடையர்
தக்கதென்றக்கணமேபாற்குடங்களைத்தாங்கினரே. (௧௯௭)

வென்றேறந்தினமிகலென்றிருமாந்தமர்வேந்தர்திரு
பன்றேறந்திகழ்மெய்ரகுநாதசேதுபதிவரைவாய்
வன்றேறந்திசையிசையுந்சொளவ்லீரண்டர்வாழ்த்தவுயர்
குன்றேறந்திமாலைமேலொளிந்திருயர்கோக்களையே. ()

வனசம்பழனம்வளர்செம்பிநாடன்மலிசெல்வத்துட்
பனசம்பழனம்ரகுநாதசேதுபதிவரைவாய்க்
கனசம்பழனப்புயர்கோப்பொருளிடங்கண்டுகொண்டோ
மனசம்பழனம்பனதாளிடமுமழிவதென்றே. (௧௯௯)

சொற்புதனுங்கல்வியிலென்றறுநினைந்தோதுமன்னி
யற்புதமன்னர்பணிரகுநாதனணிவரைவாய்க்
கற்புக்குருகைப்பிர்த்லையாமைமுன்காட்டவந்த
புற்புதமிற்குமிலையாமுந்நீரெங்குப்போகியதே. (௨00)

சேதுவையாளலர்மாதிருநால்வளர்சேதுவையாண்
மாதனவாய்ரகுநாதகிரீடிவரைவருமுற்
பாதமின்னேயுண்லெட்வாங்கச்சொற்சயம்பாகியென்றே
யோதனங்காட்டியநீகமுநீரையொளித்ததென்னே. (௨0௧)

நாகரமுந்துதமிழோரின்மைக்கங்குணையச்செய்தி
வாகரமைந்துமிகுரகுநாதன்வரைமினன்னீர்
சாகரமுந்தியடைத்திரிலங்கைமன்சந்தமணிச்
சேகரமுந்தகர்த்தானுமையோரவிசேயென்பரே. (௨0௨)

மானிலமெங்குமந்தாகிலக்தங்கமகிழ்செம்பியர்
கோனிலம்பாட்டைக்கொருரகுநாதன்குவட்டணங்கே
கானிலங்கார்கடலூர்கண்டநாமக்கலையர்க்கண்டாற்
றேனிலங்கார்திருத்தொண்டத்தொகையுந்தெரிந்தவரே. ()

ஆவசியப்பொன்னையூர்வசியூர்ப்பெயரார்க்கருளிப்
பாவசியங்கொள்ரகுநாதசேதுபதிவரைவாய்ப்
பூவசியஞ்செய்தனவசியந்தரப்பூண்டதுபோற்
கோவசியந்தரப்பூண்டதெப்போதுசொற்கோகிலமே. ()

பிங்களத்தால்வந்தடைந்தோர்குடும்பப்பிரதிட்டைசெய்யக்
கங்கணங்கட்டுசெங்கைரகுநாதன்கவின்வரைவாய்
மங்கைநல்லீருங்கள்ரத்நாகரத்தைமறைத்துவரச்
சங்கடங்காட்டத்தகுமோவிரப்பவர்தங்களுக்கே. (௨௦௫)

தோமினியார்செயினுஞ்சிறுஞ்சேதிக்கத்தோன்றுமுன்னே
மாமினினீள்வடிவாள்ரகுநாதன்வரையடவிர்
தேமினிதாமெய்யமலையைப்போற்றித்திவாமுன்முறை
யாமினியேவனநீலியைப்போற்றுதுய்யாமினியே. (௨௦௬)

மகமிலைமேவவளர்செம்பிநாட்டிறைவாகுவென்று
நகமிலைவீரரணகேசரிரகுநாதன்வெற்பிற்
சகமிலையஞ்செயமேலாயுயர்ந்தனைப்படைத்தா
அகமிலையென்றுசொல்வாரோவுலகிற்சுடர்த்தொடியே. ()

வேற்சேரலர்மச்சர்கொங்கர்வங்காளர்விறற்சமுகப்
பாற்சேரபயரகுநாதசேதுபதிவரைவாய்
நூற்சேரவையினுநூற்றிலொன்றுனநுசுப்புடையீர்
காற்சேரளித்தரைக்காற்சேர்கொடாததுகைதவமே. ()

குலத்தைத்தந்தேவர்கொளச்செம்பிநாட்டுக்குடிகளுக்கு
நலத்தைத்தந்தாளுமனுரகுநாதன்மைந்நாகத்திற்சை
வலத்தைத்தந்தார்குழலீர்முன்பதக்கவலதென்றுள்ள
கலத்தைத்தந்தீரிருதூணியுந்தாருங்கணக்குடனே. (௨௦௯)

கருக்குஞ்சிலீமுகமன்சொலிகட்டைமுன்காத்திகலை
நருக்குஞ்சிலீமுகமன்னைப்பொருரகுநாதன்வெற்பிற்
பருக்குஞ்சிலீமுகங்காட்டியஙீமறைபாணிக்குளே
யிருக்குஞ்சிலீமுகங்காட்டாதிருப்பதென்னேந்திழையே. ()

வேந்தாதிவேந்தர்பரவுஞ்சமூகவிசயன்மனு
மாந்தாதிகள்புகழ்வேள்ரகுநாதன்வரைமடவீர்
காந்தாரியாய்த்துரியோதனைமால்பெற்றுக்காட்டியவற்
காந்தாதையைமுன்னமேகாட்டியதிங்கதிசயமே. (௨௧௧)

முன்னரியைச்சிலையாகச்செய்தோன்வெட்கமுன்சிலையைப்
பின்னரியாகச்செயும்ரகுநாதப்பிரபலன்வரைப்
பொன்னேதினநற்கரும்பைத்தராமற்புழுகிலகு
பன்னுடைமூடுகுரும்பைதந்தாயென்னபாக்கியமே. (௨௧௨)

வஞ்சனையாகவருங்கொடியோர்கண்மணியிழக்க
வெஞ்சரமேவுசெயரகுநாதன்வியன்சிலம்பிற்
கஞ்சமலர்மனைவிட்டுமுன்னனைகனியளிய
நஞ்சதிடாமற்செந்தேங்காயையேதுக்குநல்கியதே. (௨௧௩)

ஆரதத்தில்வேள்கல்வியிற்போசன்றந்திற்றுவரையர்கோன்
சாரதத்தில்ராமனெனும்ரகுநாதன்சயிலமின்னே
பாரதத்திலாவதறிந்தோஞ்சிவங்கிசிப்பத்தர்புரி
விரதத்திலாவதுநீயேயறிவிக்கவேண்டியதே. (௨௧௪)

கலையைமுன்காட்டுமெதிர்போற்றவளக்கவிகைகவிழ
னிலையைமுன்காட்டும்ரகுநாதன்மால்வரைநேரிழையீர்
மலையைமுன்காட்டியடைத்தீர்கடலைநன்மந்திரத்தா
லலையைமுன்காட்டியதுபோலக்காட்டுமெனையின்றியே. ()

தங்காவியன்னநிறைசெம்பிநாடன்சரணடைந்தோர்
பங்காவியன்னரகுநாதசேதுபதிவிருதாஞ்
செங்காவியன்னமணிதானைசேர்கசச்சேவகமுன்
கொங்காவியன்னகுழலீரதுவுங்கொடுக்கினென்றே. (உகசு)

கிடைக்குங்கிடைக்குங்கிளர்செம்பிநாடன்கெடிப்பயந்தன்
படைக்கும்படைக்கும்ரகுநாதசேதுபதிவரையீர்
புடைக்கும்புடைக்குந்துரைத்தனநீர்தரப்பூரித்தநான்
கடைக்குங்கடைக்குமமைச்சரையுந்தரிற்கைக்கொள்வனே.

ஞானந்தந்திரமலிநதிச்செம்பியர்தோன்றலிசைக்
கானந்தந்திரஞ்செவிரகுநாதன்கவின்வரைவாய்
வானந்தந்திரெனநுண்ணிடையீர்நன்மணிக்கனகத்
தானந்தந்தீரினங்கோதானமுந்தரிற்றுனமெய்யே. (உகஅ)

பொன்னிக்குப்பொன்னித்திலமணியீதண்புனற்செம்பியாள்
சென்னிக்குச்சென்னியெனும்ரகுநாதனற்றேறவையன்னீர்
வன்னிக்குமுன்றனமீந்தீர்சொற்காவியம்வாசிக்கநீ
ருன்னிக்கவிஞரெனக்காட்டிற்கூடற்குடையவரே. (உககூ)

நடமுந்திசையெனப்பொற்சதங்கைத்தொனிநல்கமுன்ச
கடமுந்துபங்கசத்தான்ரகுநாதன்கவின்வரைவாய்
வடமொழிதென்மொழியாஞ்சூதமாமுன்பின்மார்க்கப்படித்
திடமுன்புகண்டனம்பின்னென்றுங்காணட்டுஞ்சேயிழையே.

கித்தியமாண்மையவுதாரீயநன் மைகீர்த்தியைந்து
நித்தியமாகும்ரகுநாதன் மால்வரைநேரிழையீர்
சத்தியமில்லையளியில்லைமெய்யுண்மைசாட்சியில்லை
யத்தியும்வம்புமுடையீருமக்கிங்கரசில்லையே. (உஉக)

தொடைக்கஞ்சியமுகிலார்பொழிற்செம்பியர்கோமதலைத்
தொடைக்கஞ்சியமெய்ரகுநாதன் மால்வரைத்தோகையுன்ற
னடைக்கஞ்சியபிடிக்குத்துணைப்பார்த்தனநாடட்டுமே
யிடைக்கஞ்சியதுடிகட்டுண்டடிபட்டிருப்பதுமே. (உஉஉ)

சத்துருமித்துருவித்துருமம்பொற்றாளமிட்டு
நத்துருநத்துருவத்துருவன்ரகுநாதன்வெற்பின்
மத்துருவைத்தரிசித்தோமுன்னுழிமதித்தவன்செய்
பத்துருவத்திலொன்றெப்போதுகாண்பதுபைந்தொடியே. ()

மன்னுமரக்கனைமுன்னாளைப்போரின்மகுடபங்கந்
தன்னுண்மையாற்செய்தமால்ரகுநாதன்சயிலமின்னே
கொன்னார்கலிங்கவங்கம்மலையாளக்குடகுதந்தாய்
பின்னாடணிமச்சதேசமுமீயிற்பெருமையுண்டே. (உஉச)

கலமலிவேலையலையலைவீழுசங்கத்துறைசேர்
தலமிகுதேவைத்துறைரகுநாததநனதன்வெற்பி
னலவனசத்திருவன்னீரும்மாவிங்குநாடொறுமுற்
பலமிலைமெத்தசலமுண்டிதென்னசம்பாவனையே. (உஉரு)

நரியாடுமொன்முசலான்போற்பகையஞ்சநாடுகுய
வரியாடவர்திலகன்ரகுநாதன்வரையணங்கே
யரியாடுகூத்துமுன்காட்டியரீயினியம்புலிச்சோ
தரியாடுகூத்தையுங்காட்டிலுண்டாம்வெகுதன்மங்களே. ()

ஓதண்டர்நாட்டிற்குடிவாங்கப்பந்தரொடுமணக்கூன்
மீதண்டநாட்டப்புரிரகுநாதனல்வெற்பணங்கே
கோதண்டங்குந்தமுன்னீந்துபின்மாமகுடமுங்கட
வேதண்டமுந்தரிஞனங்கதேசத்தைவெல்குவனே. (உஉஎ)

மாதண்டகாரண்ணியவாசிகண்முன்னிகல்வாய்க்கிலென்வில்
காதண்டுமென்றருள்செய்ரகுநாதன்கவின்வரைவாய்க்
கோதண்டக்குந்தகமின்மைமெய்யாகிற்குடமலைந
லேதண்டராகவமோதலங்காரவிளங்கொடியே. (உஉஅ)

புடவிகடந்தமிளவற்குமெய்த்தவம்பூண்டுமுன்னே
யடவிகடந்தபரரகுநாதனசலமின்னே
குடவிகடந்தரல்காட்டிக்கலையைக்கைக்கொண்டொளித்த
கடவிகடந்தரலாலுனையுஞ்சொல்வர்கண்ணனென்றே. ()

பூணைதந்தைதனைநீங்கியானந்தம்பூணக்கஞ்ச
னுணமுன்னுகைவருரகுநாதன்மைந்தாகமின்னே
பாணையேடொடிபொளிக்கவென்றுயங்கபந்தனையுங்
காணவென்றுனையேதிருமாலென்பர்கண்டவரே. (உ௩௦)

செற்கோலவெம்பகுவாய்த்தாடகைபுத்திரர்களிரா
மற்கோனுகவுதனுரகுநாதன்வரைமடவீர்
சொற்கோலிலம்பையங்கோட்டேர்நற்கோலந்தொழுதந்திரு
விற்கோலமுந்திருவேற்காடுமேற்றெழவேண்டியதே. ()

குருவார்த்தைமேற்கொண்டடர்பிசிதாசனர்கோனைவென்று
பெருமகங்காத்தனுரைரகுநாதன்பிறங்கன்மின்னே
திருநீலகண்டரைவன்னத்துடன்முன்றிலையிற்கண்டோங்
கரைதிருக்காளத்திவேடரைப்போரொடுங்காண்குதுமே. ()

வீடணனுற்சொலிலங்கைச்சுவேலைக்கும்வேலைக்குமேன்
மாடணைசெய்யச்செயும்ரகுநாதன்வரைமடவீர்
கூடவிறைசத்தினம்பகர்ந்தாமகுடஞ்செய்வினை
யாடல்கண்டோம்வலைவீசாடலுங்கண்டறிகுவமே. (௨௩௩)

திருவானகந்தொடுசெம்பியிற்றேவைத்தலத்தளவா
யுருவாகியமனுவாம்ரகுநாதன்வெற்பொண்டொடியீர்
திருவானைக்காவுஞ்சிரகிரியுந்தெரிசித்துவந்தோங்
கருவூர்திரியம்பகம்விருப்பாட்சியுங்காண்குதுமே. (௨௩௪)

காராநிதிதருசிந்தாமணிசுவர்க்கத்துடனிப்
பாராளுமிந்திரரகுநாதசேதுபதிவரைவாய்
வாரானையம்புலினுங்கஞ்சப்பாணிமணிவடமுந்
நீராடல்காப்புறுவோஞ்சொற்செய்வீரையெந்நேரிழையே.

கங்கையிலேவிடுமோடத்தலைவன்களித்துத்தொழ
நங்களுக்கோர்துணைநீயென்றருள்ரகுநாதன்வரை
மங்கைநல்லீர்தமையன்றம்பியாமுறைமார்க்கப்படி
யங்குசம்போற்றரிசிக்கட்டுநாமவராயிலையே. (௨௩௬)

துரந்தரராசபுரந்தரனைத்துரையுலகு
புரந்தவைபோகரகுநாதன்மால்வரைப்பொன்னனையீர்
கரந்தொழுவேங்கடங்காட்டியநீரினங்காட்டுமணி
யரங்கனையாழிதரனைமுகுந்தனையப்பனையே. (௨௩௭)

கனமானநீர்யௌவனமோகையிகைபொன்கல்விமெய்விற்
பனமாண்மைமீறுரகுநாதசேதுபதிவரைவாய்த்
தனரேகைகாட்டிமெய்லட்சணமுஞ்சொன்னசாத்திரமெய்
யினமாநன்மச்சமுங்காட்டிபுரைக்கிளிளங்கொடியே. ()

வெப்பளித்தாவமுறைபுங்கமெய்திகல்வேட்டிரத்தங்
கொப்பளித்தாகவஞ்செய்ரகுநாதகுபேரன்வரை
யொப்பளித்தாவதில்லாவஞ்சனமணியுண்மையிலாச்
செப்பளித்தாவதெனப்பிரயோசனந்தேமொழியே. (உ௩௯)

காலையிலாமலெக்காலையிலுஞ்செய்கடுங்கொலைவை
வேலையிலார்தருகோரகுநாதன்வியன்சிலம்பி
னூலையிலாமற்செயுமிடையீர்முன்புநாதனமாஞ்
சேலையிலாமற்றருவதுண்டோவெறுஞ்சீதனமே. (உ௪0)

நாலாம்பனுவனவரசச்சொற்றமிழ்நாவலர்க்கு
மேலாம்பரிசருண்மால்ரகுநாதவிநூரன்வெற்பிற்
பாலாஞ்சுயோதனமாருதிச்சண்டைமுன்பார்க்கநடு
நீலாம்பரனில்லையேயுரைப்பாரெவர்நேரிழையே. (உ௪௧)

சேலனமேதிசொரிசுதையுண்பணைச்செம்பியன்செங்
கோலனபாயன்ரகுநாதன்மால்வரைகொண்டவரைப்
பாலனமென்மொழியீர்முன்குசனைப்பணிந்ததுபோ
னீலனையுந்தொழுதாலெய்தலாஞ்செல்வநேத்தியதே.(உ௪உ)

தம்பதமாதியிறக்கரம்பாததரியலர்க
ணம்பதசேடரதிராகச்செய்ரகுநாதன்வெற்பிற்
கம்பதனமிடற்றீர்முனமாலெனக்காட்டியிகற்
கும்பதனங்கண்டொளிப்பதென்னுந்தகங்கோவலரே (உ௪௩)

வந்தனமாகத்தொழுவார்க்குமந்திரம்வாய்த்ததிக்கு
பந்தனமாகும்ரகுநாதசேதுபதிவரைவா
யிந்தனவத்திரத்தீர்கலியாணமிசையிலிகு
சந்தனமுன்கொடுத்தீர்கொடுப்பீரட்சதையினியே. (உ௪௪

துருப்பதனைக்கொணர்ந்தன்றெதிர்விட்டுத்துரோணரெனு
குருப்பதமேத்துமனுரகுநாதகுமுனைவ்வெற்பிற் [ங்
கருப்பதனல்லுருவீர்மூதனுமல்லிகார்ச்சுனபாம்
பருப்பதமேத்தினமாடுதுமேற்றுங்கபத்திரியே. (௨௬௫)

மித்திரபுத்திரனீகைக்குவாகைக்குமேவுபல
பத்திரனன்னரகுநாதசேதுபதிவரைவாய்ச்
சித்திரமென்மொழியீர்காமக்கோடைநெடுவெயிற்குச்
சத்திரமுன்கொடும்பின்கொடுநீர்க்குடந்தாகத்திற்கே. ()

நடமிருந்தென்னவனுஞ்சூழ்ந்தென்றேறனைத்தனிலெண்டிரு
நடமிருந்தென்னமுரசொலிசெய்ரகுநாதன்வெற்பிற்
படமிருந்தன்னவரையீர்மருந்துடன்பண்டிதவா
கடமிருந்தென்னமுன்சத்திரமிட்டபின்காய்குளமே (௨௬௭)

ஆயனங்களித்தவிருதிணைநாற்கதியாமுயிர்க்கெண்
பயனங்களிந்தரகுநாதசேதுபதிவரைவாய்க்
கயனங்களேர்ந்தனமென்றுரைத்தென்னைகாட்டியென்ன
நயனங்களேர்க்களித்தாற்பயிர்செய்குவநன்னுதலே. (௨௬௮)

உடலையுடலையுளமாதவரினுறுநரொடு
நடலைநடலையிலாமற்புரிரகுநாதன்வெற்பின்
மடலைமடலைவசியர்க்குஞ்செய்புமடவரமேல
விடலைவிடலையிலாத்தனமேதுவெளிப்பட்டதே. (௨௬௯)

சித்திரையாவணிமுன்போனடுங்கச்செறுநர்வெலும்
பத்திரையன்னரகுநாதசேதுபதிவரைவா
யுத்திரையன்னமடவீர்பணப்பையுடையர்வைச்சு
முத்திரையில்லையெனிலார்தனத்துக்குமோசங்களே. (௨௭௦)

அடலையுடையகிட்கிந்தையர்கோனையடித்தசர
விடலையெனுமெய்ரகுநாதன்மால்வரைமெல்லியலா
யிடலைவிடுமணிக்குந்தனமேனெளியேங்களுக்குக்
கடலையவனுடனீந்தாலுண்போய்பலன்கைகண்டதே.(உருக)

அருணையுந்துமணியெயிற்றேறவைக்கரசன்கொடைத்
தருணையாதருண்மால்ரகுநாதன்சயிலமன்னீர்
வருணைமுன்புகடிந்திரணிபணிவார்மொய்க்கும்ப
கருணையுந்தெமினீர்மிசங்கோதண்டங்கைக்கொண்டதே.

முல்லையலங்கலின்மின்னார்கண்வண்டினமொய்க்கவவாச்
செல்லுமிவுளித்துரைரகுநாதன்சிலம்பணையீர்
கொல்லைமுன்றோகக்குயவரிவந்துகுதிக்கக்கண்டும்
பல்லையமெங்கொளிக்கிருங்கள்சேவகம்பாழ்த்ததுவே. ()

நிற்கடங்காக்கொடியாலவட்டம்படைநேரலர்கோ
விற்கடங்காணத்தெறுரகுநாதனல்வெற்பணையீர்
சொற்கடங்காதபுகழ்முகராமனிற்றோன்றியநீர்
மற்கடங்காண்பித்துத்தாவாமுன்வேலைமறைத்ததென்னே.

முனம்படைத்திரரெனவந்தநேரலர்மூடரைப்போல்
வனப்படைத்தோடவிடுரகுநாதன்வரைமடவீர்
தனம்படைத்தீரிரண்டேர்படைத்தீரென்னதாட்சியுண்ண
வனம்படைத்தீரில்லைசத்திரமேனுக்கடைத்ததுவே. (உருரு)

கொள்ளமறையவர்க்கெண்ணிருதானங்கொடுத்தமைச்சர்
விள்ளமறைகொளுரகுநாதன்வியன்சிலம்பிற்
புள்ளமறையிதெனுங்குழலீர்முன்புகல்கணக்கு
வெள்ளமறையவுடனேபதுமம்வெளிப்பட்டதே. (உருசு)

குத்திபல்லாரிபுனாடில்லியுச்சினிகோலகொண்டை
சித்திரக்கன்முதல்வெல்ரகுநாதன்சிலோச்சயவா
யத்திரியைத்தரிசித்தோஞ்சரபங்கனாச்சிரயச்
சித்திபெற்றாலினிகாமேயிராமனுஞ்சீதையுமே. (௨௫௭)

கதக்குஞ்சரக்கரினத்தைச்சினத்துக்கடித்துணவாய்
குதக்குஞ்சரக்குமுனைன்ரகுநாதன்குலவரைவாய்
மதக்குஞ்சரக்குழலீர்தனபாரமதிப்பறிந்தோ
மிதக்குஞ்சரக்குப்பைகாட்டிமுன்கொண்டவிலைசொல்லுமே.

இடக்குமுறைசெய்கொடுங்கோலரசரினத்தைவெட்டி
யடக்குமுறைவடிவாள்ரகுநாதனணிவரைவாய்க்
குடக்குவடக்கறிந்தோமகன்விற்குணக்குத்தக்கண
நடக்குமிடமினியாமறியோமிங்ஙனன்னுதலே. (௨௫௯)

திசையம்படிக்கவளர்செம்பிநடன்மெய்த்தேவையர்கோ
ணசையம்படிக்கவரும்ரகுநாதனன்னாட்டிலுபார்ந்
தசையம்படிக்கவுங்காவேரிகாணவுந்தந்தவுங்கள்
விசையம்படிக்கவிடுங்கல்விஞன்கொள்ளமெல்லியரே (௨௬௦)

போரணவாசிநடத்தியமாத்திரைபுத்திரன்மெய்
யோரணவாசிமுனைரகுநாதன்வெற்பொண்டொடியீர்
வாரணவாசிமுன்கண்டுவந்தோநல்வாரிதிசேர்
காரணவாசிமணிகோகனமென்றுகாண்பதுவே. (௨௬௧)

படியிட்டமாகப்புரந்தடங்காதபகையைவென்ற
வடியிட்டவேற்கைரகுநாததீரன்மணிவரைவாய்த்
தொடியிட்டசெங்கையிளம்பிடிநீநயந்தோன்றவுடம்
பிடியிட்டபோதல்லவோநிசமாமுன்பிடியிட்டதே. (௨௬௨)

குனிக்குமுன்னே சிலையொன்னலர்வாய்ச்சொல்குளறவுமெய்
பனிக்கும்வெங்கண்டரகுநாதமேசதுபதிவரைவாய்ச்
சனிக்குமுன்னே திருவாரூர்க்கமலத்தடத்தைக்கண்டோ
மினிக்கண்டுபோற்றுதுமம்பலவாணன்மன்றேந்திழையே ()

துணிவார்க்குமாபலிபாற்றொனமேற்றிடத்தோயத்தைமுன்
னணிவார்க்குமாபுரிதேவைத்துறைரகுநாதன்வெற்பிற்
பணிவார்க்குச்சொர்க்கமளித்தாயினியப்பரமபதந்
தணிவார்க்குநீதரிலுண்டாமகிமைதளிரியலே. (உகச)

சுகராலயத்தையற்றோர்பணிதேவைதொழுமன்னர்சூழ்
நகராலயத்தைரகுநாதனைமுன்னாட்டந்தந்தே
சிகராலயத்தைமுன்காணப்பெற்றோம்வசுதேவர்தந்த
மகராலயத்தையுங்காணிலுண்டாங்கதிவாணுதலே. (உகரு)

ஓகையையூகைபுடனேகொண்டாதுலர்க்கோய்வதின்றி
யீகையையீகைபுரிரகுநாதன்வெற்பேந்திழையீர்
வாகையைக்காட்டியதுபோலிப்போதுங்கண்மன்னவன்ப
தாகையைக்காண்பிக்கினீரேயவற்குத்தளகர்த்தரே. (உகசு)

நூதனமாகத்தருவிற்கனகனூற்கவிக்குச்
சீதனமாகத்தருரகுநாதனற்றேவையன்னீர்
மாதனநாகமுன்காணவென்றுக்கிரவழுதியைப்போற்
கேதனங்காட்டப்பயந்தாலுமக்கபகீர்த்திகளே. (உகள)

நெருப்புஞ்சதாகதியுங்கலந்தாலெனநேரலர்மேற்
றிருப்புஞ்சமர்வடிவேல்ரகுநாதனற்றேவையன்னீர்
கருப்புங்கலசமுமையம்புகலுங்கல்காதூநற்பால்
பருப்புர்தனம்பணியாரமளித்ததென்பாக்கியமே. (உகஅ)

காலேத்தந்தத்தியையா றிடமாப்படைக்காவலன் சென்
கோலேத்தந்தத்தியைச்செய்ரகுநாதகுமுணன் வரைப்
பாலேத்தந்தத்தியைவாய்மடவீர்முன் பரபனைப்போற்
றோலேத்தந்தத்தியையெங்கொளித்தீர்தரிற்றோற்றுவனே. ()

மாட்டாங்குளப்படியோலொன்னலர்படைவாரிகடந்
திட்டாங்குளத்தினிதிரகுநாதன்வெற்பேந்திழையீர்
நாட்டாங்குளமலையாங்குளங்கண்டனநாமினிமேற்
காட்டாங்குளத்தையுங்காண்பதெப்போதுகழறுகவே. ()

அடம்பிடிக்கைதைவளர்செப்பிநாட்டிலரசுநன்மை
யிடம்பிடிக்கைதரச்செய்ரகுநாதன்வெற்பேந்திழையீர்
கடம்பிடிக்கைதைவருமுங்களூர்ப்பயிர்காணக்குடி
யுடம்பிடிக்கைதருமுன்வாரகந்தந்ததுத்தமமே. (உஎக)

தடம்பணிலஞ்செழியுஞ்செம்பிநாட்டிற்றரியலருய்
யிடம்பணிகேட்டுத்தொழுரகுநாதன்மெய்யேமவெற்பிற்
கடம்பணியாங்குகுடமுன்கண்டோமயில்காணிலன்றோ
திடம்பணிவோமயில்வாகனனென்றுனைத்தேமொழியே. ()

ஊளனைமுன்காட்டுப்புறவினுக்காகவுதவுமனுக்
கோனைமுன்காட்டத்தகுரகுநாதகுபேரன்வரை
யானையின்மேல்வைத்துக்கோலமுன்காட்டியருளிவட
மீனையுங்காட்டிலன்றோகலியாணமெய்மெல்லியலே. (உஎ௩)

நாலார்கலிப்படையேலாருயிர்கொணமனெனவே
வேலார்கரதலமால்ரகுநாதன்விலங்கன்மின்னே
மாலார்திருக்கச்சியத்திகிரிகண்டுவாழ்ந்தவரைம்
பாலாறுசேர்திருப்பாற்கடல்கண்டுபணிதனன்றே. (உஎச)

வெருவிடந்தைக்கோலலட்சியமாகக்கைவேல்கொண்டிக
இருவிடந்தைக்கப்பொருரகுநாதன்வெற்பொண்டொடியீர்
மருவிடந்தைப்பணியீர்திருநீர்மலைமாலைக்கண்டோர்
திருவிடந்தைக்குமயிலைக்கும்போவர்தெரிசிக்கவே. (௨௭௫)

தரைக்குந்தரையெனவாழ்செம்பித்தேவைத்தலந்தர்மகிழ்
துரைக்குத்துரைரகுநாதன்சிலோச்சயத்தோகையன்னீர்
வரைக்குவரையுளதென்றுமுன்காட்டிவரினுமவை
திரைக்குத்திரையிடுவாரோவுலகிற்றெரிந்தவரே. (௨௭௬)

மஞ்சளையிஞ்சிதளிர்வளர்செய்யொடுமெஞ்சளிஞ்சி
விஞ்சுமெய்த்தேவைத்துரைரகுநாதன்விலங்கன்மின்னே
துஞ்சுமுனேமுசுகுந்தனிலாமற்றுரத்தியகீ
கஞ்சனையுந்தொலைத்தாற்றொழுவாருனைக்கண்ணனென்றே.

கேட்டந்தமன்னரிசைவீரமாண்மைகிளர்புகழ்பூண்
சூட்டந்தமாமெய்ரகுநாதன்றேவைச்சுடர்க்கிரிவாய்க்
காட்டந்தமாஞ்சொற்கடைமருந்தீர்பெருங்காயமென்று
கோட்டந்தந்தீர்கடுக்காய்ப்பூவுநீர்தரக்கோருவனே. (௨௭௮)

குச்சிலையெய்தப்பெறுதவரேனுந்தற்கோரிவந்தான்
மச்சிலையெய்தச்செயும்ரகுநாதன்வரைமடவீர்
நச்சிலையென்பதறிந்தோநும்பாலினிநாங்களுய்யக்
கச்சிலையென்பதுஞ்செய்தால்வெகுநன்மைகாணுமக்கே. ()

அஞ்சையிலேவெருவேலென்றெளியரையாதரிக்கு
மஞ்சையிலேசெனச்செய்ரகுநாதமகிபன்வரைப்
புஞ்சையிலேதுவரையென்றுகாட்டியிப்போதழகா
நஞ்சையிலேயெனலாமோபெண்ணேபொன்னிநாட்டினிதே

சந்தனுமேபோசனளன்மாதவனரிச்சந்திரன்போல்
வந்தனுமானமறுராகுநாதன்வரைமடவீ
ரெந்தனுவெய்தமதிமாவிரண்டதிலக்குத்தப்பி [றே.
வந்ததிலொன்றைமறைத்தொன்றைக்காட்டனன்மார்க்கமன்

தாகமிருந்தவழியோர்க்கமுதந்தருதவிற்றி
யாகமிருந்தகாரகுநாதனணிவரைவாய்
மாகமிருந்தநவீர்துரோணவருபதும
யூகமிருந்துஞ்சயினியமோடியொளித்ததென்னே. (உஅஉ)

வீரரண்போர்க்குவெருவிமுன்சந்திவிடினுமொப்பாத்
தீரரணமதமாரகுநாதன்சிலம்பணையீர்
நீரரண்கைக்கொண்டுவெற்பாணைத்தள்ளனீதியன்று
பாரரணம்மிலையுங்களரயணைப்பாழென்பரே. (உஅ௩)

வாட்டானைகொண்டகடற்றானைமண்டவருமகத
நாட்டானைவென்றசெயரகுநாதநரேந்திரன்வரைக்
காட்டானைவென்றகட்டீர்கிள்ளையேந்திமுன்காணுமயிற்
கோட்டானைவென்றகரும்பிளையாலூரங்கோகிலமே. (உஅ௪)

கூட்டிடநட்பைப்பிரிக்கப்பிரித்ததைக்கூட்டிப்பின்னு
மீட்டிடச்செய்தந்திரரகுநாதன்விலங்கலன்னீர் [ன்
நாட்டிடைச்செட்டியுரத்தைமுன்காண்பித்துநஞ்சத்தைப்பி
காட்டிடவோமறைத்தீருங்கள்வாணியங்கைகண்டதே. ()

கிள்ளைமறைசொலக்கோகிலங்கேட்டுக்கிளர்பொழில்சூழ்
வள்ளைவயற்செம்பியாள்ரகுநாதன்வரைமடவீர்
பிள்ளைமுன்பெண்டக்ததானங்கண்டோமந்தப்பிள்ளைசைவங்
கொள்ளையிடச்சமணேடிட்டதுங்கண்டுகொள்வதென்றே. ()

கலையிருந்தா னுமுளத்திற்றா யங்கழறாமனு
நிலையிருந்தாலமகிழ்ரகுநாதநிருபன்வெற்பிற்
சிலையிருந்தாவதென்னைகட்டியப்பரைச்சேர்க்குமுன்னே
யலையிருந்தாலல்லவோசொல்லுவாயினியங்கனையே. ()

நாதகமம்புகையையீட்டிமாரதாகமன்செய்
சாதகமன்னுமுராரகுநாதஞதயாளன்வெற்பிற்
பேதகமின்னற்பெருந்துறைகாட்டியபின்னலவோ
போதகங்காட்டத்தகுமடியார்கட்குப்பூங்கொடியே (உஅ)

வான்சிந்திப்பூங்கரில்லாக்கைம்மாறுடைவள்ளல்செய்பிக்
கோன்சிந்திப்பாவலர்சொல்ரகுநாதன்குவடணையீர் [தா
தேன்சிந்திப்போமென்றளித்திர்முன்பானையத்தேதணைத்தந்
ஞன்சிந்திப்போமென்றுந்தித்திக்கக்கொண்டுங்களுமதனைத

கட்டணக்கோட்டைநிதியோமென்னார்தங்கைகுவித்துக்[பே
கொட்டணக்கோட்டைவிடுரகுநாதகுபேரன்வரை
யுட்டணக்கோட்டைநிகர்களத்திர்தருமுங்கள்பெரும் [மே.
பட்டணக்கோட்டையைப்போற்சக்தைப்பேட்டையைப்பார்க்கட்டு

குஞ்சத்தைவெள்ளைக்குடையைத்தமிழ்க்குக்குலவுசப்பிர
மஞ்சத்தையீயுங்கொடைரகுநாதயகிபனல
வஞ்சத்தைவென்னடைமானேமுன்பந்தரையாதரித்த [பேசு
கஞ்சத்தைச்சேர்ந்தனன்சேர்வதெப்போதுவங்காளத்தை

விண்புவிபூடணமாடைபொன்னுடைவிபவமென்று
நண்புவிபீடணர்செய்ரகுநாதநரேந்திரன்வெற்பிற்
பண்புவிபூதியனையீரிருகொங்கைபாலித்தநீ
ருண்புவிபூசனையாற்கொள்ளுவாரையுதவலையே. (உகூ)

டம்புவியாகரணங்கலைஞானங்கொள்பண்டிதரா
னம்புவியாழுமெனும்ரகுநாதன்மைந்நாகமின்னே
கொம்புவியாசர்கதையெழுதேடுகொடுத்ததுமெய்
யம்புவியாளவரமுந்தந்தாற்கலியாணமெய்யே. (உகூங)

ஊருமானைபிட்டிகலேதாவிபவத்தருப்பசிக்கோ
தருமானையிட்டவிரல்ரகுநாதன்றடவரைவாய்
வருமானைமென்குழலீர்செய்குவார்கைவரினுமெய்யாக்
கருமானையின்றியமையாதுகாண்குப்பகாரனுக்கே. (உகூச)

கங்கையைக்கண்டவர்கங்கையைக்கண்டுகெருதுமவர்
சங்கையைக்கண்டனைசெய்ரகுநாதன்சயிலவரை
யிங்கையைக்கண்டசொற்றேறன்வஞ்சிகூடலின்றகொல்வஞ்சி
கொங்கையைக்கண்டனன்பாணனையுங்கண்டுகொள்ளுவனே

வானங்குலவரையெங்குந்தன்சீர்த்திவளரவுமை
கோனங்குலப்பணிசெய்ரகுநாதகுழுணன்வரைத்
தானங்குலவுமின்னனீர்முன்பெற்றவர்தங்களுக்கு
மானங்குலமெய்தப்பண்ணுமுன்னேவந்தமாதங்கமே. ()

தென்னவரைவில்லவரைமனுவிற்றிருத்தியிசை
மின்னவரைபுரிரகுநாதன்விலங்கலன்னீர்
சொன்னவரையழிந்தோழுங்கள்காவியஞ்சூத்திரமா
மென்னவரையமறையாமலிந்திடுமெங்களுக்கே. (உகூகா)

திறையடிக்கும்பலதீவுங்கலிப்பகைதீரவென்று
பறையடிக்கும்பொன்ரகுநாதசேதுபதிவரைவாய்க்
கரையடிக்கும்பமுனிகாட்டக்காணுந்தொல்காப்பியத்தின்
மறையடிக்கும்பன்முடிக்குமுரையொன்றுவானுதலே. ()

சிந்துரத்தந்தளமேற்கொண்டிடப்பரசேனையைமாய்
சிந்துரத்தந்தளவேல்ரகுநாதன்சிலம்பிற்பொன்னே

சிந்தூரத்தந்தச்சந்தங்கண்டனமொன்றுசேரையடிச்
சிந்தூரத்தந்தமிகுகிதழுங்கண்டுதேர்வதென்றே. (உகூகூ)

நிசிசரனன்றுமெய்யொன்னும்வெங்கூற்றைநிமிடத்திற்கொல்
விசிகரமன்றொடுவேல்ரகுநாதன்வியன்சிலம்பில்
ருசிகரமென்றயின்மோகனதம்பனரூபமின்னே
வசிகரமென்றறிவிப்பாய்முன்பேதனம்வாய்த்தவர்க்கே. ()

மச்சுப்பெய்வீடுநிதிபாமறையவர்வாழ்த்தவொரு
மிச்சுப்பெய்தானரகுநாதன்மால்வரைமின்னனையீர்
கச்சுப்பயோதரவண்ணப்பொன்மாலைமுன்காட்டியநீர்
நச்சுப்பொய்கைத்தலத்தைவரைமீட்டிடினன்மையுண்டே. ()

தனதடப்பத்திசெலுத்தலரற்கெனுங்கர்மவுள்ளத்
தனதடப்பத்திதருரகுநாதன்சயிலமன்னீர்
தனதடம்பத்திபங்கிரிணியஞ்சனவைவச்சு
சனதடம்பத்தியதிகாரமுந்தரத்தக்கவரே. (ஙOஉ)

ஸைப்போதகத்தைசுடரமாந்திமணிமானுமெய்யி
சைப்போதகத்தைவாரகுநாதன்சயிலமன்னீர்
மைப்போதகத்தைநுசுப்பிரிணிதடறுனுங்கள்பொய்
கைப்போதகத்தையுங்கைப்போதகமெனக்காணட்டுமே. ()

பண்டுதந்தீர்வையில்லாமற்குடிகட்குப்பற்றலர்மெய்
விண்டுதந்திர்படச்செய்ரகுநாதவிசயன்வெற்பில்
வண்டுதந்தீர்வைகியகுழலீர்கொண்டைமாலைமணச்
செண்டுதந்தீர்சாமுந்தாக்கோருமென்சிந்தனையே. (ஙOச)

வருமலைவென்றரவிபோற்பகையைமடித்துக்கொடைத்
தருமலைவெய்த்தருரகுநாதன்சயிலமன்னீர்
பொருமலையீசத்தியையொழித்திருப்புரிவலியை
யிருமலைபுக்கவிர்த்தானீர்மருத்துவரெங்களுக்கே. (ஙOரு)

அல்லாரைக்குண்டலவில்லாரைமந்திரத்தாற்செய்பிரா
டெல்லாரையுந்தொடவாழ்ரகுநாதன்வெற்போங்கிழையீர்
நல்லாரைப்போல்வருங்கல்லாரைவிட்டெந்தனுநயஞ்சொல்
யில்லாரைக்காய்கின்றவல்லாரைக்காட்டுதலெங்களுக்கே. [ஆ

ஊடலையிருதலையுற்றேன்பழிதொடர்ந்தோடிவர
வாடலையும்வென்றரகுநாதன்றேறலையணிவரைவாய்
மாடலைக்கர்த்தகுழலீர்நற்சர்க்கரைவட்டுத்தந்தீர்
கூடலையும்விட்டுக்கலந்தாலல்லோருசிகாண்பதுவே. (௩0௭)

வளமேவுசேதுரைரகுநாதபூபன்வரையிடத்தே
குளமேவுசெஞ்சொற்குயிலனையீர்நின்கொடுவிரக
முளமேவுகாமசுரதாகந்தீர்ந்திடவுன்னிடத்தா
மிளநீரைத்தந்தினிக்கண்டிறவாவிடிலென்பலனே. (௩0௮)

நித்தங்கும்பிட்டுப்பராசர்பற்கெஞ்சிறப்பப்பொன்னை
வைத்தங்கிருக்கும்ரகுநாதன்சேதுவைமணிவரைவாய்
நத்தங்கும்பிட்டகுழலீரதிசயநன்றுநன்றிங்
கத்தங்கும்பத்தைவிட்டப்பாவிராசிநட்பானதுவே. (௩0௯)

பையாடரவம்புனைராமலிங்கர்பதம்பணியு
மையானனுஞ்சொற்றுசரகுநாதன்மைந்நாகமன்னீர்
செய்யாததிசயஞ்செய்தீர்தனத்தைத்திறந்தளித்துக்
கையாற்கடலடைத்தீர்திருமாறிறங்காட்டியதே. (௩௧0)

கோவைத்துறையொன்றிஞ்ஞூறுகொண்டமைக்கொண்ட
டேவைத்துரைதளவாய்ரகுநாதன்சிலம்பின்மக [லெங்க
னேவைக்கொடியைமூரசைவின்றுணையென்பால்வனசப்
பாவைக்கமுதனையீர்மறைத்தீரென்பகையென்னவே. *(௪00)

---

* இடையிலுள்ள 89-செய்யுட்களகப்படவில்லை—பதிப்பாசிரியர்.

# செய்யுள் முதற்குறிப் பகராதி.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 20 | 24 | மூதுணர்தோர் | மூதுணர்ந்தோர |
| 33 | 21 | பபருங் | பாருங் |
| 36 | 17 | குருப்பை | குரும்பை |
| 39 | 20 | கோட்டுர் | கோட்டூர் |

